

உ
சிவமயம்

# உழவாரம்

சமய இலக்கியத்திங்கள் இதழ்

மலர் 15 ] ஜுலை 1999 [ இதழ் 1

பெருமைதரு ஆசிரியர், ''திருமுறைக்காவலர்''
கயிலைத் திரு. M. கண்ணப்ப செட்டியார் அவர்கள்
(நிருவாக இயக்குநர், ஸ்ரீ மங்கையர்க்கரசி ஆலை)








1999
ஜூலை
மலர் 15
இதழ் 1

மதுரைப் பன்னிரு திருமுறை மன்றத் திங்கள் இதழ்

## நமது சிந்தனைக்கு

தம்மானை அறியாத சாதியார் உளரோ
சடைமேற்கொள் பிறையானை விடைமேற்கொள்
விகிர்தன்
கைம்மாவின் உரியனைக் கரிகாட்டில் ஆடல்
உடையானை விடையானைக் கறைகொண்ட
கண்டத்து
எம்மான்தன் அடிக்கொண்டென் முடிமேல்வைத்
திடும்என்னும்
ஆசையால் வாழ்கின்ற அறிவிலா நாயேன்
எம்மானை எறிகெடில வடவீரட் டானத்து
உறைவானை இறைபோதும் இகழ்வன்போல்
யானே.

—சுந்தரர்

உலகில் தம் தலைவனை உருவம் அறியாதவர் உளரோ? இல்லை. அப்படியிருக்க நீலகண்டனாகிய அப்பெருமான் தனது திருவடியை என் தலைமேல் வைத்துவிடுவது என்று விரும்பி, சடைமேல் பிறையை உடையவனும், விடை ஏற்பவனும், யானைத் தோலைப் போர்ப்பவனும்கரிந்த காட்டில் ஆடுபவனும் எம் தலைவனும் ஆகிய, கெடில நதியின் வடகரையிலுள்ள திருவீரட்டானத்தில் விரும்பியிருக்கின்ற பெருமானை, அவன் அதனைச் செய்வதையும் யான்அறியாமல் இகழ்வேன் ஆயினேன் போலும். என்னே என் அறியாமை!

---

தேசபக்தி இல்லாதவனுக்கு வேறு எதிலும் பக்தி இருக்க முடியாது.

- பைரன்

# தெய்வ பக்தியும் - தேச பக்தியும்

(தருமையாதீனம் 26 ஆவது குருமகா சந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த
பரமாசாரிய சுவாமிகள்)

''பொறையொருங்கு மேல்வருங்கால் தாங்கி இறைவர்க்கு
இறையொருங்கு நேர்வது நாடு''

[வங்கதேச உதயத்திற்குப் பாடுபட்ட இந்தியப் பெரு வீரர்களின் வரலாற்றுச் சிறப்புமிக்க வெற்றியினை வியந்து தேச பக்தியும் தெய்வ பக்தியும் மனித வாழ்விற்கு இரு கண்கள் போன்றன என்பதனை விளக்கி - நாடு காக்கும் வீரர்களின் நலங் காக்கும் பொறுப்பு யாவர்க்கும் உரியது என்பதனை வலியுறுத்தி நிறைவுபெற்றுள்ளது இவ்வாசியுரை.]

**மனிதாபிமானம் :**

சகோதர நாடாகிய பாகிஸ்தான் தவறான எண்ணத்தால் விளைவித்த 'பங்களாதேஷ்' உரிமைப் போரில், நாம்விரும்பாமலேயே மனிதாபிமான உணர்ச்சியின் அடிப்படையில் நம்மை ஈடுபடுத்திக் கொள்ளவேண்டுவதாயிற்று. இப்போர் முற்றி, நமது கிழக்கு எல்லையிலும், மேற்கு எல்லையிலும் தீவிரமடைந்து பல்லாயிரம் மக்களுக்கு பெருந்தீங்கு விளைத்தது.

**வரலாறு காணாத வெற்றி :**

நமது நாட்டின் பெருமையைப் பெரிதும் உயர்த்தக்கூடிய நிலையில் நம் முப்படை வீரர்களும் ஒன்றுபட்டு உறுதியாக நின்று இதுவரை வரலாறு காணாத ஒரு மாபெரும் வெற்றியைப் பதினான்கே நாட்களில் வாங்கித்தந்து, சுதந்திர வங்காள தேசத்தை உருவாக்க உதவியிருக்கிறார்கள். இப்பெருமை கிடைக்கக் காரணமாக இருந்த நம் வீரர்களில் பல்லாயிரவர், நமக்காகவும்; நம் தாய் நாட்டிற்காகவும் உயிரைத் தியாகம் செய்துள்ளார்கள். பல்லாயிரவர் உடலைத்

நாட்டுப்பற்றைவிட அதிகமான அன்பு வேறில்லை.
—பிளேட்டோ

தியாகம் செய்து ஊனமடைந்துள்ளார்கள். பல்லாயிரவர் தாமிருந்த ஊரையும், நாட்டையும், உற்றார் உறவினரையும் தியாகம் செய்து அன்னியரால் சிறைபிடிக்கப்பட்டுள்ளார்கள்.

**தியாகராசர் தந்த கலைஞர் :**

தியாகம் செய்த வீரர்களின் குடும்பங்களைப் பாதுகாக்க வேண்டிய பொறுப்பும் கடமையும் இந்திய நாட்டிற் பிறந்த ஒவ்வொரு மனிதனுக்கும் உண்டு. நிதி மிகுந்தவர் பொற்குவையாக, நிதி குறைந்தவர் காசுகளாக, ஆண்மையாளர் உழைப்பாக. அதுவும் அற்றவர் வாய்ச்சொல்லாகத் தியாகம் செய்ய முன்வர வேண்டும். அயிராவணத்தையும், அமரர் நாட்டையும் தியாகம் செய்து, ஆருயிர்களை மதித்து அடல் விடை ஏறும் அண்ணல், தியாகராசப்பெருமான் வீற்றிருக்கும் தியாகத்தலமாகிய திருவாரூரில், ஒவ்வொருவரும் தியாகம் செய்ய வேண்டுமென்பதற்கு எடுத்துக்காட்டாகத், தியாகராசர் தந்தகலைஞர் கருணாநிதியின் கரத்தில் நம்முடைய தியாகத்தைப் பொன்னாகவும், பொருளாகவும்வழங்கத் திருவருள் கூட்டியிருப்பது மிக்க பொருத்தமுடையதாக அமைந்திருக்கிறது.

**தெய்வபக்தியும்—தேசபக்தியும்:**

தெய்வ பக்தியையும், தேச பக்தியையும் இரு கண்ணெனப் போற்றியவர்கள் தருமையாதீன மகாசந்நிதானங்கள். தருமை ஆதீனக் குருமணிகளின் புனித வரிசையில் 25வது குருமணியாக, சைவமும் — தமிழும் தழைக்க அருளாட்சிபுரிந்து, சமீபத்தில் காசித் தலத்தில் முத்திப்பேறெய்திய ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகா சந்நிதானத்தின் நினைவாக, நமது ஆதீனத்தின் சார்பில் ரூபாய் 25,001க்கும், ஆதீனப் பணியாளர்கள் சார்பில் ரூபாய் 2,501க்கும் உரிய காசோலைகள் இத்துடன் வழங்கப்பட்டிருக்கின்றன. தமிழக முதல்வர் மேற்கொண்டிருக்கின்ற நல்லறப் பணிக்கு நம் தமிழ் மக்கள் பல்லாற்றானும் உதவி, தமிழகத்தின் நன்றி உணர்வைப் பலப்படுத்துவார்கள் என்பது உறுதி. போரில் நாம் மாபெரும் வெற்றி அடைந்திருப்பது போல், போருக்குத் துணைநின்ற போர் வீரர்களின் குடும்பங்களின் நல்வாழ்விற்குப் பெருந்தொகை வழங்குவதிலேயும் வெற்றிபெற்றுத் தமிழ் மக்களின் பெருமையை நிலைநாட்டிக்கொள்வது இன்றியமையாதது. இவ்வறப்பணி எல்லா வகையிலும் சிறக்கச் செந்தமிழ்ச் சொக்கன் திருவருளைப் பிரார்த்திக்கிறோம்.

---

உண்மையான மனிதன் யாரையும் வெறுப்பதில்லை,

— நெப்போலியன்

உயிரா வ(ண்)ணமிருந் துற்று நோக்கி
உள்ளக் கிழியின் உருவெழுதி
உயிர் ஆவணம் செய்திட் டுன்கைத் தந்தால்
உணரப் படுவாரோடு ஒட்டி வாழ்தி
அயிராவணம் ஏறாது ஆனேறு ஏறி
அமர்நா டாளாதே ஆரூர் ஆண்ட
அயிராவணமேயென் அம்மானே நின்
அருட் கண்ணால் நோக்காதார் அல்லாதாரே.

—நன்றி 'திருவருட் செய்தி'

---

தலவரலாறு

## முக்கிச்சுரம்

உறையூர். [திருச்சி]

சோழநாட்டு (தென்கரை)த் தலம்.

திருச்சிராப்பள்ளி நகரின் ஒரு பகுதி உறையூர். இதுவே மூக்கீச்சுரம் எனப்படுவது திருச்சி – உறையூர்-அடிக்கடி பேருந்துகள் உள்ளன. சோழ மன்னர்களின் தலைநகரமாக உறையூர் ஒரு காலத்தில் விளங்கி வந்தது. புகழ்ச் சோழ மன்னர் ஆண்ட பதி. ''ஊரெனப் படுவது உறையூர்'' என்னுந் தொடர் இதன் சிறப்பினை புணர்த்தும். ''உறந்தை'' என்றும் இதற்குப் பெயர். மூவேந்தரும் வழிபட்ட சிறப்புடைய தலம்.

உறங்காமுனிவருக்கு இறைவன் ஐந்து காலங்களில் ஐந்து வண்ணங்களோடு காட்சி நல்கிய தலம். இதனால் இறைவனுக்குப் பஞ்சவர்ணேஸ்வரர் என்று பெயர். வீரவாதித்தன் என்னும் சோழ மன்னன் உலா வரும்போது அவனது யானையைக் கோழியொன்று வென்றமையால் இத்தலம் 'கோழியூர்' என்றும் பெயர் பெற்றது. இச்சிற்பம் (யானையைக் கோழி தாக்குவது) ஆலயத்தின் பலவிடங்களில் உள்ளது. பழைமையும் சிறப்பும் உடைய இப்பதி இன்று வாணிபத்தில் மேலோங்கியுள்ளது.

இறைவன் — பஞ்சவர்ணேஸ்வரர்,
இறைவி — காந்திமதி
தலமரம் — வில்வம்
தீர்த்தம் — சிவதீர்த்தம்,
சம்பந்தர் பாடல் பெற்ற தலம்.

---

கௌரவமுடையவர்களுக்கு வெற்றியைக் கொடுப்பது சத்தியமே.

—செஸ்டர்பீல்டு

இத்திருக்கோயில் கடைவீதியில் அமைந்துள்ளது. கிழக்கு நோக்கிய முகப்பு வாயில், கல் மண்டபம், உட்சென்றால் பெரிய நந்தியைத் தரிசிக்கலாம். செப்புக் கவசமிட்ட கொடிமரம். உள் கோபுரம் நுழைந்து சென்றால் முன்மண்டபத்தில் வலப்பால் அம்பாள் சந்நிதியுள்ளது. தெற்கு நோக்கியது நின்ற திருக்கோலம். நேரே மூலவர் சந்நிதி தெரிகின்றது. மூலமூர்த்தி மிகவும் சிறிய சிவலிங்கத் திருமேனி. சுயம்பு மூர்த்தியாகத் திகழும் இத் திருவுரு உள்ளங்கையளவே உள்ளது.

நடராசசபை உள்ளது. மூலவரின் அணுக்க வாயிலில் இருபுறமும் துவாரபாலகர்கள் உளர். உள் மண்டபத்தில் இடப்பக்க முதல் தூணில் உட்புறம் ''யானைமீது அம்பாரியில் சோழ மன்னன் வரும் போது, அவ்யானையைக் கோழி குத்தித் தாக்கும் சிற்பம்' உள்ளது. இதன் பக்கத்தில் உதங்கமுனிவர் இறைவனை வழிபடும் சிற்பம் உள்ளது. புகழ்ச்சோழர் திருமேனி உள்ளது. உதங்கமகரிஷியின் எதிரில் நடராசசபை உள்ளது. கோஷ்ட மூர்த்தமாக விநாயகர், தட்சிணாமூர்த்தி, இலிங்கோற்பவரிடத்தில் மகாவிஷ்ணு, பிரமன், துர்க்கை ஆகிய திருவுருவங்கள் உள்ளன.

பெரியதும் சிறியதுமாக இரு தட்சிணாமூர்த்தி உருவங்கள் உள்ளன. பெரிய உருவம் சிறந்த சிற்பக் கலையழகுடன் திகழ்கின்றது. சிறியது சோழர் காலத்தியது. பெரியதாக வைக்க எண்ணி நாட்டுக்கோட்டை நகரத்தார் தம் திருப்பணியில் செய்து இரண்டையும் வைத்து விட்டார்கள். திருமாலுக்கு எதிரில் உள்ள தூணில் பிட்சாடனர் உருவம் உள்ளது. இதற்கு எதிர்க் கம்பத்தில் தாருகாவனத்து ரிஷிபத்தினிகளின் உருவங்கள் உள. உறையூர்க் கோயிலில் சிற்பங்களுக்குக் குறைவில்லை என்பது போல, கருவறையின் வெளிப் பக்கச் சுவரில் ஏராளமான சிற்பங்கள் உள்ளன. கருவறை வெளிச் சுவரில் மேற்புறத்தில் நான்கு பக்கங்களிலும், வரிசையாக இறைவனின் பல்வகையான தாண்டவங்களின் சிற்பங்கள் மிக்ககலையழகுடன் காணப்படுகின்றன.

சுற்றியுள்ள தூண்களில் பலவகையான சிற்பங்கள் உள்ளன. ஒரு தூணில் ஐந்து பெண்கள் உருவத்தையே ஒரு குதிரையாக அமைத்துள்ள சிற்பமும்; நான்கு பெண்கள் உருவத்தையே ஒரு குதிரையாக அமைத்துள்ள சிற்பமும் கண்ணுக்குப் பெருவிருந்தாவன.

---

பிறர் துன்பம் கண்டு வருந்துதல் மனிதகுணம்; அதனை நீக்குதல் தெய்வகுணம் — [illegible]

மற்றுமுள்ள பலதூண்களில், இறைவனின் கண்ணை அப்புதல், மன்மதன்பாணம், தபஸ்காமாட்சி, கோழியும் யானையும் நேருக்கு நேர் நின்றவாறு சண்டையிடும் காட்சி முதலான அற்புதமான சிற்பங்கள் உள்ளன.

அம்பாளின் (காந்திமதியின்) சந்நிதியின் கருவறையின் வெளிப்புறத்தில் வலம் வரும்போது பறவையின் கால், மனிதஉடல் யானை முகம் கொண்ட அழகான சிற்பம் உள்ளது. அதன் மறுபக்கத்தில் யானையைக் கோழி கொத்துகின்ற மிக அழகான சிற்பம் உள்ளது. காணத் தகுந்த அற்புதக் காட்சி.

இங்குள்ள *தீர்த்தம்— சிவதீர்த்தம்.* இது கோயிலுள் உள்ளது. இத் தீர்த்தத்தின் சிறப்பு வருமாறு :-

''திருப்பராய்த்துறையில் இருந்து வாழ்ந்து வந்த அன்பரொருவர் திருநீற்றைப் பெற்று வாயால் ஊதிய பாவத்திற்காகக் காட்டுப் பன்றியாய்ப் பிறந்து, பல்காலும் திரிந்து கடைசியில் வில்வ வனமாகிய இத்தலத்தை அடைந்து, அழிக்கத் தொடங்கியபோது வேடர்கள் அதுகண்டு துரத்த அப்போது அபபன்றி ஓடமாட்டாது இங்குள்ள சிவதீர்த்தத்தில் விழ்ந்தது. இத் தீர்த்தத்தில் விழ்ந்தமையால் அப் பன்றி பேறு பெற்று உய்ந்தது. அத்தகைய உயர்ந்த தீர்த்தம் இத் தீர்த்தமாகும்.''

இச் சிறப்பினை விளக்கும் சிற்பம், இத் திருக்குளத்தில் இறங்கும் போது வலப்புறத்தில் கல்லில் செதுக்கப்பட்டுள்ளது. வைகாசி விசாகத்தில் பத்து நாள்களுக்குப் பெருவிழா நடைபெறுகின்றது. திருப்பணிகள் செய்யப்பெற்று விபவ ஆண்டு தை மாதம் 26-ஆம் தேதி (8-2-89)ல் மஹா கும்பாபிஷேகம் செய்யப்பட்டுள்ளது. சோழ மன்னர்களின் திருப்பணியும், அடுத்து நகரத்தாருடைய திருப்பணிகளும் பெற்றுச் சிற்பக்கலையழகுடன் திகழும் உறையூர்த் தரிசனம் உள்ளத்துக்கு உவப்பைத் தருவதில் மேலோங்கி நிற்கின்றது. திரிசிரிபுரம் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் இத் தலத்திற்குத் தலபுராணம் பாடியுள்ளார்.

---

கஷ்டங்களுக்கு இடம் கொடாமல் அவற்றை துணிவோடு எதிர்த்து நில். — வர்ஜில்

# பதிகப் பெருவழி—68

## முக்கீச்சரம்

### திருஞானசம்பந்த சுவாமிகள் அருளியது

பண் : செவ்வழி

திருச்சிற்றம்பலம்

சாந்தம்வெண் ணீ றெனப்பூசி வெள்ளஞ்சடை வைத்தவர்
காந்தள் ஆரும் விரல்ஏழை யொடுஆடிய காரணம்
ஆய்ந்து கொண்டாங்கு அறியந் நிறைந்தார்,
அவர் ஆர்கொலோ
வேந்தன் மூக்கீச் சரத்தடிகள் செய்கின்றதோர்
மெய்ம்மையே. 1

நன்மணம் திகழும் சாந்தம் தருவது எனக்கருதி, திருவெண்ணீற்றினைக் குழையப்பூசிக்கங்கையினைச் சடை முடியில் வைத்தவராகிய சிவபெருமான், காந்தள் மலர் போன்ற அழகிய பூ விரல் கொண்டு விளங்கும் உமாதேவியோடு சேர்த்து திருநடனம் புரிந்த காரணத்தை ஆராய்ந்து அறிந்து கொண்டவர் யார்கொல்! இச் செயல் யாவரையும் நன்கு பாதுகாப்பவராகிய ஈசனாகிய மூக்கீச்சரத்து அடிகள் புரிகின்ற மெய்ம்மையே ஆகும்.

வெண்டலையோர் கலனாப் பலிதேர்ந்து விரிசடைக்
கொண்டலாரும் புனல்சேர்த்து உமையாளொடும்
கூட்டமா
விண்டவர்தம் மதில்எய்தபின் வேனில்வேள் வெந்தெழக்
கண்டவர் மூக்கீச் சரத்து எம்அடிகள் செய்கன்மமே. 2

பிரம கபாலத்தைப் பிச்சைப் பாத்திரமாகக் கொண்டு பலி கொள்வதை விரும்பிய ஈசன், ஆகாச கங்கையினைச் சடை முடியில் தரித்து, உமாதேவியார் ஒரு பாகத்தில் விளங்கச் சேர்ந்து நின்று பகைத்த முப்புர அவுணர்தம் கோட்டைகள் வெந்து சாம்பல் ஆகுமாறு செய்தவர். அப்பெருமான் மன்மதன் எரிந்து சாம்பலாகுமாறு செய்து பின்னர் உயிர்த்து எழுமாறு அருள் புரிந்தவர். இத்தகைய திருவிளை யாடல்களை நிகழ்த்துபவர் மூக்கீச்சரத்தில் வீற்றிருக்கும் எம் ஈசன் ஆவார்.

---

துக்கப்படுவோருக்குக் காலம் ஆறுதல் அளிக்கும்.

—ஜோபர்ட்

மருவலார்தம் மதில்எய் ததுவும்மால் மதலையை
உருவிலார்அவ் எரியூட்டி யதும்மலகு உண்டதால்
செருவிலாரும் புலிசெங் கயலானை யினான்செய்த
பொருவின் முக்கீச்சரத்து எம்அடிகள் செயும்பூசலே. 3

ஈசன் தன்னை மருவிச் சார்ந்து பணிதல் இன்றிப் பகைத்து நின்ற அசுரர்களையும் அவர்களுடைய மூன்று புரங்களையும் எரிந்து சாம்பலாகுமாறு செய்த பரமன்; திருமாலின் புதல்வனாகிய மன்மதனை, வடிவம் அற்றவனாகத் திகழுமாறு நெற்றிக் கண்ணால் விழித்து நோக்கிய தலைவன்; தென்னவனாய் உலகு ஆண்ட கோச்செங்கட் சோழன் திருப்பணி ஆற்ற மூக்கீச்சரத்தில் எழுந்தருளிய அடிகள் ஆவர். அவ் இறைவன் திருச் செயலே யாவையும் ஆற்ற வல்லதும்.

அன்னம் அன்னந் நடைச்சாய லாளோடு அழகெய்தவே
மின்னையன்ன சடைக்கங்கை யாள்மேவிய காரணம்
தென்னன் கோழி எழில்வஞ்சியும் ஓங்கு செங்கோலினான்
மன்னன் மூக்கீச்சரத் தடிகள் செய்கின்றது ஓர்மாயமே. 4

அன்னம் போன்ற நடையின் சாயல் கொண்டு விளங்கும் உமாதேவியார் ஒரு பாகத்தில் மேவித் திகழ, அழகு மிளிரும் மின்னலைப் போன்ற சடை முடியின் மீது கங்கை என்னும் நங்கையினைக் கொண்டுள்ள காரணமானது, சேர, சோழ, பாண்டியர்களால் திருப்பணிகள் ஆற்றி, வணங்கி ஏத்தப்பெறும் நாதனாகிய மூக்கீச்சரத்தில் வீற்றிருக்கும் அடிகள் செய்கின்ற ஓர் மாயமே ஆகும்.

விடமுனாரவ் வழல்வாய தோர்பாம்பரை வீக்கியே
நடமுனாரவ் அழலாடுவர்பேயொடு நள்ளிருள்
வடமனீடு புகழ்ப்பூழியன் தென்னவன் கோழியன்
அடல்மன்மூக்கீச் சரத்தடிகள் செய்கின்றதோரச்சமே. 5

விடம் பொருந்திய அரவத்தை அரையில் கட்டிக் கையில் நெருப்பினை ஏந்தி நள்ளிருளில் பேய்க்கூட்டத்தோடு நடனம் புரிபவர் ஈசன்

---

வயோதிகம் வயதைப் பொறுத்ததன்று; உணர்ச்சியைப் பொறுத்தது.
— கார்ட்டிஸ்

ஆல்போல் தழைத்த நீண்ட புகழ் விளங்கும் பாண்டியர்களும் சோழ மன்னர்களும் வணங்கிப் போற்ற, ஆற்றல் மிக்கு மேவும் நாதனாகிய மூக்கிச்சரத்து அடிகள் புரிகின்ற இத்தகைய செயல்கள் யாவும் அவ் இறைவனுக்கே எளிமையானதாகும்.

வெந்தநீறு மெய்யில் பூசுவர் ஆடுவர் வீங்கிருள்
வந்தென்ஆரவ் வளைகொள்வதும் இங்கொருமாயமாம்
அந்தண்மா மானதன்னேரியன் செம்பியன் ஆக்கிய
எந்தைமூக்கீச் சரத்தடிகள் செய்கின்றதோர் ஏதமே. 6

ஈசன், திருவெண்ணீற்றைப் பூசி அணிந்து, அடர்த்தியான இருள் சூழ்ந்த மயானத்தில், நின்று நடனம் புரிபவர். அப்பெருமான், என் உள்ளத்தில் புகுந்து என்னை அப்பெருமானையே நினைத்து உருகுமாறு செய்வித்தும் என் மேனியை இளைத்து மெலியுமாறு செய்தும், என் வளையல்கள் தாமாகவே கழன்று விழுமாறுபுரிந்தவர். இது ஒரு விந்தையே ஆகும். முற்பிறவியில் சிலந்தியாய் இருந்து யானையை வென்ற தன்மையில் கோச்செங்கட்சோழனாக்கிய எந்தை மூக்கீச்சரத்து அடிகளே, இவ்வாறு என்னை உருகச் செய்யும்படி செய்த பெருமான் ஆவார்.

அரையிலாரும் கலையில்லவன் ஆணொடு
பெண்ணுமாய்
உரையிலார்அவ் அழலாடுவர் ஒன்றலர் காண்மினோ
விரவலார்தம் மதில்மூன் றுடன்வெவ்வழல் ஆக்கினான்
அரையன் மூக்கீச் சரத்தடிகள் செய்கின்றதோர்
அச்சமே. 7

ஈசன், அரையில் துகில் பொருந்திக் கட்டாது கோவணத்தை உடுத்தியவர்; ஆணொடு பெண் வடிவமும் சேர்ந்து மேவும் அர்த்த நாரியாய்த்திகழ்பவர்; சொற்பொருளுக்கும் உரைகளுக்கும் அப்பாற் பட்டவர்; அதனைப் போன்று வரையரையில்லாத நெருப்பினைக் கையில் ஏந்தி திருக்கூத்து புரிபவர்; எப்பொருளின்மீதும் பற்றுக் கொண்டு ஒன்றுதல் கொள்ளாது விளங்கித்திகழ்பவர். அப்பெருமான், பகைத்த முப்புரத்து அசுரர்களையும், அவர்தம் கோட்டைகளையும்

---

உண்மையான பெரிய மனிதனுக்கு முதல் அடையாளம் பணிவு.
—ரஸ்கின்

எரிந்து சாம்பலாகுமாறு செய்தவர். அவர், தலைவராக விளங்கி, மூக்கீச் சரத்தில் மேவும் அடிகள் ஆவார். இவை யாவும் அவருக்கு மிக எளிமை வாய்ந்த செயலாகும்.

ஈர்க்குநீர்செஞ் சடைக்கேற்றதும் கூற்றை உதைத்ததும்
கூர்க்குநன்மூ விலைவேல்வலன் ஏந்திய கொள்கையும்
ஆர்க்கும்வாயான் அரக்கன் உரத்தை நெரித்தவ்வடல்
மூர்க்கன் மூக்கீச் சரத்தடிகள் செய்யாநின்ற
மொய்ம்பதே. 8

கங்கையைச் சடை முடியில் ஏற்றதும் தன்பால் வந்தடைந்த மார்க்கண்டேயரின் உயிரைக் கவர முனைந்த கூற்றுவனை உதைத்து அழித்ததும், கூர்மை விளங்கும் சூலத்தை ஏந்திய கொள்கையும், ஆரவாரம் செய்து வாய்ச் சொல் புகலும் இராவணனுடைய வலிமையை நெரித்து அடர்த்த செயலும், திண்மையுடன் விளங்கும் மூக்கீச்சரத்தில் மேவும் அடிகள் செய்த வலிமையின் பாற்றே ஆகும்.

நீருளாரும் மலர்மேல் உறைவா (ன்) நெடுமாலுமாய்ச்
சீருளாரும் கழல்தேட மெய்த்தீத் திரள் ஆயினான்
சீரினால்அங்கு ஒளிர்தென்னவன் செம்பியன் வில்லவன்
சேருமுக்கீச் சரத்தடிகள் செய்கின்றதோர் செம்மையே. 9

நீரில் விளங்கும் தாமரை மலரில் உறையும் பிரமனும், திருமாலும், திருக்கழலைத் தேடி நிற்க, மெய்மை மேவும் தீத் திரளாய் ஓங்கிய ஈசன், சீரிய புகழால் ஒளிரும் பாண்டியர், சோழர், சேரர்ஆகிய பெருமன்னர்கள் சேர்ந்து தொழுமாறு விளங்கும் மூக்கீச்சரத்து மேவிய அடிகள் ஆவார். இச்செயல், அப்பெருமான் புரியும் செம்மையாகும்.

வெண்புலால் மார்பிடு துகிலினர் வெற்றரை உழல்பவர்
உண்பினாலே உரைப்பார் மொழி ஊனம தாக்கினான்
ஒண்புலால் வேல் மிகவல்லவன் ஓங்குஎழிற் கிள்ளிசேர்
பண்பின் முக்கீச் சரத்தடிகள் செய்கின்றதோர்
பச்சையே. 10

---

உலகில் அழகு எளிது, குணம் அரிது. —பைரன்

துவர் ஆடை அணிந்துள்ள சாக்கியரும், திகம்பரராகிய சமண ரும் உரைக்கும் மொழிகள் ஊனம் உடைமையாகும் என ஆக்கிய ஈசன், மாற்றாரை வென்று தென்னவனாய் உலகாண்ட கோச் செங்கட் சோழன் திருஉள்ளத்தின் பாங்கால் அமையப் பெற்ற முக்கீச் சரத்தில் மேவும் அடிகள் ஆவார். இத்தகைய அருமைவாய்ந்த திருப் பணிகள் யாவும் அப்பெருமான் நிகழ்த்துகின்ற பசுமையான அருட் பேறு ஆகும்.

மல்லையார்மும் முடிமன்னர் மூக்கீச்சரத்து அடிகளைச்
செல்வராக நினையும்படி சேர்த்திய செந்தமிழ்
நல்லராய்வாழ் பவர்காழியுள் ஞான சம்பந்தன
சொல்லவல்லார் அவர்வானுலகு ஆளவும் வல்லரே. 11

திருச்சிற்றம்பலம்

வளமும் வலிமையும் மிக்க மூவேந்தர்களும் மூக்கீச்சரத்தில் மேவும் ஈசனைத் தமது செல்வராக நினையுமாறு புரிந்ததனைச் செந் தமிழ் வல்லவராகவும் நல்லவராகவும் வாழ்பவர்கள் திகழும் காழியுள் விளங்கும் ஞானசம்பந்தர் அருளிய இத்திருப்பதிகத்தைச் சொல்ல வல்லவர்கள் வானுலகத்தை ஆளும் வல்லமையைப் பெறுவார்கள்.

---

தருமையாதீன ஆன்மார்த்தபூஜாமூர்த்தியாகிய ஸ்ரீ சொக்கநாதப்
பெருமானைச் சிரத்தின் மீது எழுந்தருளச் செய்து கொண்டு
ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் அடியவர்கள்
புடைசூழப் பாதயாத்திரையாக திருக்கோளிலிக்கு
(திருக்குவளை) எழுந்தருளிய

## திருத்தலயாத்திரை நினைவு அருளநுபவங்கள்

வித்துவான் தா. குருசாமி தேசிகர், மதுரை.

சென்ற இதழ் தொடர்ச்சி.........

அறிக்கைச் செய்தியோ டூர்தி மூலம்
குறித்த வருகை அருளிப், பாட்டை
ஒலிபரப் பாக்கி குருவருள் பெருக்கினர்!
நலிவிலா நன்றியை நயனொடு காட்டினர்;
வலிவுடன் கல்லூரி பள்ளித்துறையினர்!

---

வணங்க ஆரம்பிக்கும்போதே வளர ஆரம்பிக்கின்றோம்.

—கோலரிட்ஜ்

ஆரூர் அரனெறி பரவை யுண்மண்டளி
பாரூர் அறியப் பரவிப் போற்றி
சிவராத் திரிநாள் சித்தீச் சுரமும்
பவவினை போக அடியவர் உடனாய்
தரிசினை முற்றி கரவீரத் தலம்

பரிவொடு சென்றே பரவிப் போற்றி
மௌன மடத்தின் நிதியாற் புதுக்கிய
மௌனத் திருப்பணி ஆங்கறிந்தறிந்தே
விளம்பரம் வேண்டா வித்தக குருமணி
களப்பணி போற்றி வாஞ்சியம் நண்ணிட
''ஊழ்வினை நலிய ஒட்டார்'' கழலைப்
பாழ்வினை நீக்கப் பதிகத் தோடே
முத்தித் தலத்தே மூல 'லிங்கம்
நத்தவே குருமணி பூசை கொண்டார்!
நண்ணில நாதரைச் செங்கணான் நாளில்
பன்னலம் புனரப் பாங்குடன் தொழுதே
வாஞ்சிநாதர் கழலடி போற்றி
ஆஞ்சிறப்புடன் வீழிமிழலை நண்ண-
ஆவடுதுறை யுறை நிருவாகிகள்
தாவிடும் அன்பின் தம்பிரானொடு
பூரண கும்ப மரியாதை செயச்
'சரணம் குருவே சார்பெனச் சார்ந்தே
மிழலை மக்கள் நீறும் ஆசியும்
குழலிசை போல இன்புடன் பெற்றனர்!

ஓத உலவாப் பதிகம் முற்றும்
ஓத வழிபாடினி தியன்றதே

படிக்காசு பெற்ற இருவர் மடங்கள்
முடியாக் காட்சியில் தரிசனை செய்தும்
ஆரூர்த் தேவா சிரிய மண்டபக் காட்சியும்
ஓவாப் புகழுடை மிழலை போற்றும்
வௌவால் நெற்றி மண்டபம் வியந்தும்
வழியில் வன்னியூர் பெருவே ளூர்த்தல

---

நல்ல ஒழுங்குதான் எல்லா விஷயங்களுக்கும் அடிப்படை.
—பாக்

அழிவிலாப் பதிகப் பதிவொடு போற்றி
"நமக்கு நல்ல நல்லம்' தலத்தில்
நமக்கும் இனிய 'தம்பிரான்' 'கூத்தன்'
தரிசனம் முற்றி, தம்மின மக்கள்
புரிந்தே போற்றிட வடமட்டத்தூர்—
பள்ளியில் பூஜா மூர்த்தி பூசை
அள்ளிய அன்பொடு குருவருள் நிகழ்ந்தது!

கோனேரி ராஜபுர மெனும் 'நல்லம்'
மானேர் கண்ணித் தலம்விட் டகன்றே
'கோமல்' கிருபா குபேசுரர் தங்கி
'நாமெல் லாமே இறைவனுக் கடிமை
என்பதைக் குருவருள் உணர்த்த உணர்ந்தே
வழித்துணைக் கதிபர் வதியும் மூவலூர்
கழிவிலா தெழவே வழியில் அழுந்தூர்
இந்தளப் பண்ணின் வேதப் பொருளை
வந்த பதிக வழியால் போற்றி—
மார்க்க சகாயர் கார்காத்த வேளார்
ஆர்க்கும் அருளின் அன்பின் வளாகம்
தங்கி மாலை சித்தர்க் காடு
பாங்குடன் போற்றி சம்பந்தர்க்கோயிலும்
மயிலாடு துறை பிரசன்ன மாரியம்மன்
குயில் கூவும் கோயிற் காசிநாதர்
வழியுள கோயில் வணங்கி வாழ்த்தி
பழியிலாத் தருமைப் பதியை மீண்டும்
தகவொடு சூழ்ந்த அடியவர் உடனாய்
புகுந்தனர் குருமணி மூர்த்தியுடனே!

மறுமை மறுத்தே அடிமை பூண்டவர்
ஒருவனைப் பற்றிய உத்தம அன்பர்கள்
தருமைப் பூசை மடந்தனில் மூர்த்தி
அருமைப் பாட்டுடன் எழச்செய் காட்சியில்
தம்மைமறந்தே மகிழ்ந்தே வணங்கினர்!
நம்மை உய்விக்கும் குருமணி அவர்களை

---

சட்டத்திற்கு உட்பட்டு அமையும் சுதந்திரமே உண்மையான சுதந்திரம்.

—பர்ட்டன்

ஒடுக்கந் தனிலே ஓலக்கம் செய்தே
மடுத்த அன்பொடு வழிபா டியற்றியே
கயிலை மாமுனிவர் வணங்கிப் பரவ
தைல தாரைப்பத்திமைப் பண்பால்
காலையும் மாலையும் கடவுளைத் தொழுதே
ஆலய மாகிய குருமணி கரத்தால்
அடியவர் வணங்கி நீறு பெற்றனர்!
படிமிசை நிகழ்ந்த குருமணி யாத்திரை
தமிழகம் போற்றும் புனிதச் செலவாம்!
தமிழகம் வாழ்க! ஞாலம் வாழ்க!
சைவமும் தமிழும் தழைக்கச் செய்த
சைவ யாத்திரை மேலும் நிகழ
குருவருள் உளங்கொள வணங்கி வாழ்த்துவன்
திருவருள் வாலிதாய் வருகென வேண்டுவன்!

முற்றுரை :

பாத யாத்திரை பரவிய தலங்கள்
மாதவம் செய்தவை முன்பே! பின்பே
மீதவ மாகிய பழிபா வங்கள்
தருமைத் தமிழ்முனி பாதப்பதிவால்
அருமையில் எளிய புற்பனி யாயின!
பைந்தமிழ்ப் பாதக் கதிரொளி பட்டதால்
பதிகங் களுமே மலர்ச்சி யாயின!

(முற்றும்)

---

## ஆடல் வல்லாரின் அபிஷேகங்கள் ஆறு

| | | |
|---|---|---|
| 1. | மார்கழிமாதம் திருவாதிரை நட்சத்திரம் | உஷக்காலம் |
| 2. | மாசிமாதம் சுக்ல பட்ச சதுர்த்தசி திதி | காலசந்தி |
| 3. | சித்திரை மாதம் திருவோண நட்சத்திரம் | உச்சிக்காலம் |
| 4. | ஆனிமாதம் உத்திர நட்சத்திரம் | சாயரட்சை |
| 5. | ஆவணி மாதம் சுக்ல பட்ச சதுர்த்தசி திதி | இரண்டாங்காலம் |
| 6. | புரட்டாசி மாதம் சுக்ல பட்ச சதுர்த்தசி திதி | அர்த்தசாமம் |

---

தியாகம் என்பது தேச நலத்திற்காகச் சுயநலத்தை தியாகம் செய்வதே.

—இராமதீர்த்தர்

# தமிழ் அருச்சனை

முதுபெரும்புலவர், சித்தாந்தக் கலைமணி, திருமுறை உரைமணி,
திருநெறித் தமிழ்ச்சுடர், மகாவித்துவான், முனைவர்
உயர்திரு. சி. **அருணைவடிவேலு முதலியார்**, அவர்கள்

நால்வர் நெறி :

சொற்கோவும் தோணிபுரத் தோன்றலும்எம் சுந்தரனும்
சிற்கோல வாதவூர்த் தேசிகனும் - முற்கோலி
வந்திலரேல் நீறெங்கே! மாமறைநூல் தான்எங்கே!
எந்தைபிரான் அஞ்செழுத்தெங் கே

என்னும் சிவானந்த மாலை வெண்பாவில் கூறியுள்ளபடி சங்க காலத்தை அடுத்து 'நால்வர்' எனத் தொகைக் குறிப்பால் குறிப்பிடப் படுகின்ற அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர் என்னும் நால்வர் ஆசிரியர் தமிழ்நாட்டில் அவதரித்து தங்கள் அருட்பணியினை ஆற்றாதிருப்பின், சைவ சமயம் மறைந்து, மறைந்த இடமும் புல் முளைத்துப் போயிருக்கும்.

சைவம்-மட்டும் தானா? 'மாமறை நூல்' எனப்படும் வேதப் பாடல்கள்தாம் தமிழ் நாட்டில் எங்கேனும் ஒலிக்குமோ? எங்கும் நாத்திகம் ஒன்றே நடம் புரியும். நால்வர் நற்றமிழ் பற்றி எளிமையாக எண்ணுவோர் யாவரும் இதனை ஆழச் சிந்தித்தல் வேண்டும்.

மறுமுறை எழுச்சி

தமிழ் நாட்டில் திருக்கோயில்களில் தமிழ் அருச்சனை பற்றிய கிளர்ச்சி சில ஆண்டுகட்கு முன் தோன்றிப் பின் அடங்கிவிட்டது. ஆயினும் அது மறுமுறை எழுச்சியாக இப்பொழுது தோன்றியுள்ளது. அதுபற்றி மாறுபட்ட கருத்துக்களைப் பலர் வெளியிடுகின்றனர்.

மறுப்புரைகள்

திருக்கோயில்களில் தமிழ் அருச்சனை நிகழ்த்துதலை மறுப்பவர்கள் 'கோயில் வழிபாட்டு முறைகள் அனைத்தும் ஆரிய மொழியில் உள்ள வேதம், ஆகமம் என்பவற்றில் சொல்லியுள்ளபடி ஆரிய

---

நாம் எங்கு சுகமாக இருக்க முடிகிறதோ அதுதான் நமது தேசம்.
—மில்டன்

மொழியாலே நிகழ்ந்து வருகின்றன. 'இம்முறை என்று தோன்றிற்று; என்ற சொல்ல இயலாது. காலம் காலமாக நடைபெற்று வருவது' இதனை மாற்ற முயல்வது தான்தோன்றித்தனமாக முடியும்' என்கின்றனர்.

கால எல்லை அறிய இயலாமை பற்றியே ஒரு நிகழ்ச்சியை ''காலம் கடந்தது'' என்று சொல்லி விட முடியாது.

உலகம் கடல், நிலம், மலை என்னும் பிரிவுகளை உடையது. ஆயினும் கடல் முதலியவைகளும் ஒரு காலத்தில் தோன்றிய என்றே அறிஞர் கூறுவர்.

''கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே'' என்னும் ''வெண்பா மாலை வரி'' எல்லாம் ஒரு காலத்தில் தோன்றிய வைதாம் என்பதை குறிப்பிடுகின்றது.

''நிலம் உயிர்கள் வாழும் இடமாக மாறியதும் ஒரு காலத்தில் தான்'' என்பர் அறிவியலார்.

கால எல்லை அறியப்படாதவற்றை 'தொன்மையானவை' எனக் கூறலாமேயன்றி 'காலத்தை கடந்தது' எனக் கூற இயலாது.

## ஆரிய வழிபாடு

இனி, தமிழ்நாட்டுத் திருக்கோயில்களில் ஆரிய மொழி வழிபாட்டு மொழி ஆனது ஒரு கால கட்டத்தில் தான் என்பதற்குத் திரிலோசன சிவாசாரியார் தம்முடைய சித்தாந்த சாராவளியில் கிரியா பாதமுடிவில்,

''ராஜேந்திர சோழன் என்னும் பெயருள்ள சோழராஜன் ஒருவன் பூமியாளும் காலத்தில் கங்காஸ்நானத்திற்குப் போனபோது அவ்விடத்தில் சைவாசாரியார்களைக் கண்டு, ஸ்நானஞ் செய்து திரும்பிவரும் போது அந்த சைவாசாரியார்களை அழைத்துக்கொண்டு வந்து தன்னுடைய ராஜ்யத்தில் ஸ்தாபித்தான். அதுமுதல் காஞ்சி மண்டலத்திலும் சோழ மண்டலத்திலும் எங்கும் சைவ சம்பிரதாயம் விஸ்தாரமாயிற்று என்று அறிக' என்று கூறியிருப்பதே சான்றாக வல்லது.

---

உலகமே அழிந்தாலும் நியாயத்தை நிலை நாட்டு.

ரோமன் சக்ரவர்த்தி

தமிழின் தொன்மை :

ஆரியத்தை விடுத்துத் தமிழை ஆராயின், அதுவும் ''தோற்றம் அறியப்படாத தொன்மையுடையதே'' என்பதை மறுப்பார் ஒருவரும் இல்லை.

இனி வரலாற்றை நோக்கினால் ''ஆரியம் இந்திய நாட்டில் ஒரு காலத்தில் நுழைந்த நுழைவு மொழியே'' எனத் திட்டவட்டமாகச் சொல்லப்படுகின்றது. அதுபற்றியே மனோன்மணீயம் பேராசிரியர் சுந்தரம் பிள்ளையவர்கள்,

''சதுமறை ஆரியம்வருமுன் சகம்முழுதும் நினதாயின்
முதுமொழிநீ அநாதி என மொழிவதும்ஓர் வியப்பாமோ''

என்று தெளிவுபெறப் பாடினார். அவரது கூற்றினை ''உண்மைக்குப் புறம்பானது', என விலக்குதல் இயலாது. ஏனெனில், அவரது கூற்றைக் கருத்தில் கொள்ளாமலே வேறுவகையில் அஃதாவது அகழ் வாராய்ச்சி முதலியவற்றால் இந்திய நாட்டின் முற்கால நிலைபற்றி ஆராய்கின்ற ஆராய்ச்சியாளரது கூற்றுக்கள் தம் இயல்பிலேயே சுந்தரம் பிள்ளையவர்களது முடிவை வலியுறுத்துகின்றன.

தெய்வமொழி ;

மேற்குறித்தபடி ''இந்திய நாட்டின் தெய்வப் பொது மொழி ஆரியம்'' என்பது இன்று சிலரால் வலியுறுத்திக் கூறப்பட்டபோதிலும் சுந்தரம் பிள்ளையவர்களது கூற்றுப் படியும், ஆரியர் வருகைக்கு முன்பே தமிழர் உயரிய கடவுட் கொள்கை உடையவர்களாய் இருந்த னர் எனக் கூறும் ஆராய்ச்சியாளர் கூற்றுப்படியும் முதற் காலத்தில் தமிழே இந்திய நாட்டின் தெய்வ மொழியாகவும் விளங்கியிருந்தமை தெரியவருகின்றதன்றோ?

வாழ்வியல் மொழி :

ஆரியம் இந்திய நாட்டின் பொதுமொழியாய் விளங்குதல் சமயத் துறையில்அல்லதுவாழ்வியல் முறையில் அன்று. வாழ்வியலில்இந்திய நாட்டின் உட்பகுதிகள் பலவற்றிலும் வேறு வேறு மொழிகளே வழங்கின. அந்நிலையில் ஆரியம் இந்தியாவில் எந்த ஒரு பகுதிக்கும் வாழ்வியல் மொழியாக இருந்தமைக்குச் சான்றில்லை.

— தொடரும்.

---

ஞானமில்லாமல் நீதி செலுத்துவது இயலாது —புருட்

## ஆடி மாத அடியவர் வழிபாடு

சிவபெருமானை முழு முதற் கடவுளாய் நினைந்து வழிபடும் நெறி 'சிவநெறி' அச்சைவ நெறியைத் தவறாது பின்பற்றி இறைவனது திருவருளுக்குப் பாத்திரமானவர் 'சைவ நாயன்மார்' அவர்களுடைய அடிச்சுவட்டைப் பின்பற்றி வாழ்ந்தால், எல்லா நலன்களும் பெறலாம். சிவபெருமான் அந்நாயன்மாருக்கு முத்திப்பேறு அளித்த நக்ஷத்திரமுள்ள நாளை 'குருபூசை' நாளாகக் கொண்டாடுவது சைவப்பெருமக்களின் கடமையாகும்.

### பெருமிழலைக் குறும்ப நாயனார் (20—7—99)

''அறன் அறிந்துமூத்த அறிவுடையார் கேண்மை
திறன் அறிந்து தேர்ந்து கொளல்''

சுந்தரமூர்த்தி நாயனார் என்ற பெரியாரைப் போற்றித் தம்முடையவராகக் கொண்டு அரிய பேறுகள் பெற்று சிவபெருமானின் அருள் பெற்றவர் பெருமிழலைக் குறும்பநாயனார். குருபூசை ஆடித் திங்கள் 'சித்திரை' நன்னாள்.

### சுந்தரமூர்த்தி நாயனார் (21—7—99)

''தன் உயிர் தான் அறப் பெற்றானை ஏனைய
மன்உயிர் எல்லாம் தொழும்''

திருநாவலூரில் சிவவழிபாட்டுப் பணியாற்றும் குடும்பத்தில் அவதரித்து, சிற்றரசரது அரண்மனையில் வளர்ந்து 16 ஆண்டிற்கு மேல் பரவை சங்கிலியார் ஆகிய இரு மனைவியாரைப் பெற்று 18 வது ஆண்டிற்குள் தன்னுயிர், தனது, என்னும் பற்று நீங்கப்பெற்ற சிவத்தொண்டராக பலதலங்களில் சிவபெருமான் வழிபாடு செய்து பிற உயிர்கள் தொழ வாழ்ந்தவர். குருபூசை நாள் ஆடித்திங்கள் 'சுவாதி' நன்னாள்.

---

**கோழைக்கு நல்ல அதிஷ்டம் ஒரு நாளும் வராது.**

—ஜெர்மனி

கழறிற்றறிவார் நாயனார் (21—7—99)

''புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்
நட்பு ஆம் கிழமை தரும்''

நட்பு செய்தற்குத் தொடர்பும் பழக்கமும் வேண்டுவதில்லை. ஒத்த உணர்ச்சியே நட்பு ஆகிய உரிமையைக் கொடுக்கும். கழறிற்றறிவாராகிய சேர அரசரும் சுந்தரமூர்த்தி நாயனாரும்இறை வழிபாட்டின் மூலம் அறிமுகமானவர்கள். ஒத்த உணர்வுடையவர் களான படியால் கைலைக்கும் ஒன்றாகச் செல்லும்பேறுபெற்றார்கள். குருபூசை நாள் ஆடித்திங்கள் 'சுவாதி' நன்னாள்.

கலிய நாயனார் (24—7 –99)

''துன்பம் உறவரினும் செய்க துணிவு ஆற்றி
இன்பம் பயக்கும் வினை''

துன்பம் அடைய நேர்ந்தாலும் தளராது துணிந்து முடிவில் இன்பந்தரும் செயலையும் செய்க என்ற வாசகத்திற்கேற்ப சிவப்பணி செய்தவர் திரு வெற்றியூர் கலிய நாயனார். குருபூசை நாள் ஆடித் திங்கள் 'கேட்டை' நன்னாள்.

கோட்புலி நாயனார் (24—7—99)

''அறத்தினூ உங்கு ஆக்கமும் இல்லை அதனை
மறத்தலின் ஊங்கில்லை கேடு''

அறத்தைவிட உயிர்க்கு ஆக்கம் வேறுஇல்லை. அதனை மறத் தலை விடக்கேடில்லை, இறைவனது திருக்கோயிலுக்குச் சேர வேண்டிய அமுதுபடி நெல்லை அனுப்பும் அறத்தை மறவாது கோட் புலியார் செய்து அதற்கிடையூறு விளைவித்தவர்களைத் தண்டனைக்கும் உள்ளாக்கியவர். குருபூசை நாள் ஆடித்திங்கள் 'கேட்டை' நன்னாள்.

---

பயத்தை வெல்லும் அளவே மனிதன் மனிதனாகிறான்.

—கார்லைல்

மூர்த்தி நாயனார் (5—8—99)

''நாள்தொறும் நாடி முறை செய்யா மன்னவன்
காள் தொறும் நாடு கெடும்''

நாள் தோறும் ஆராய்ந்து ஆட்சிமுறை செய்யாத அரசனது நாடு நாள்தோறும் கெடும். மதுரையில் கொடுங்கோல் ஆட்சிபுரிந்த வடுக மன்னனின் துன்புறுத்தலுக்கு ஆளான மூர்த்திநாயனார் சந்தனக் காப்பிற்கு தனது சந்தனம் அரைக்கும் சிவப்பணி முட்டுப் படாது சிவபெருமான், அவரை நாட்டின் மன்னராக்கினார். குரு பூசை நாள் ஆடித் திங்கள் 'கார்த்திகை' நன்னாள்.

புகழ்ச்சோழ நாயனார் (5—8—99)

''ஊழி பெயரினும் தாம் பெயரார் சான்றாண்மைக்கு
ஆழிஎனப்படுவார்''

சான்றாண்மைக்கடல் எனப்புகழப்படுபவர் ஊழிக்காலம் நிலை குலைந்தாலும் தாம் நின்ற நிலை குலைய மாட்டார்.

சோழ அரசனாகிய புகழ்ச்சோழர் முன் இறந்த போர் வீரரில் ஒருவரது தலையில் 'சடைமுடி' காணப்பட்டதில் தான் செய்த சிவ அபராதமாகக் கொண்டு உயிர் நீத்தார். குருபூசைநாள் ஆடித்திங்கள் 'கார்த்திகை' நன்னாள்.

கூற்றுவ நாயனார் (8—8—99)

''இறைகாக்கும் வையகம் எல்லாம் அவனை
முறைகாக்கும முட்டாச் செயின்''

அறமுறை தவறாத அரசனின் நாட்டை இடையூறு வருங்கால் அம்முறையேகாக்கும். அம்முறை தவறாத 'கூற்றுவ' மன்னனுக்கு சிவபெருமானே தமது திருவடிகளை அவர்தலையில் சூட்டினார்.

நாயன்மார் குருபூசை நாட்களில் மதுரை பன்னிரு திருமுறை மன்றத்தார் திருக்கோயிலில் அந்த நாயனாருக்கு வழிபாடும், திரு முறை ஓதியும், மன்றத்தில் திருத்தொண்டர் புராண சிந்தனையும் நிகழ்த்துவர்.

—C S. சொக்கலிங்கம்

---

தலை பணிந்து வாழ்வதைவிட, நிமிர்ந்து நின்று சாவதே மேல்.

— டொலரீன் இப்பாருரி

## செய்திகள்

★ மதுரை தியாகராசர் கல்லூரி தமிழ்த்துறை சார்பில் 28-6-99 அன்று சைவசித்தாந்தச் சொற்பொழிவு நடைபெற்றது. [கல்லூரித் தலைவர் டாக்டர் திருமதி இராதா தியாகராசன் தலைமையில் டாக்டர் திருமதி கோமதி சூரியமூர்த்தி 'திருக்களிற்றுப்படியார்' என்ற தலைப்பில் சொற்பொழிவாற்றினார்.

★ ஆச்சாள்புரம் ஸ்ரீ குருஞான சம்பந்தர் பணி மன்றம் சார்பில் 31-5-99 அன்று ஸ்ரீதிருஞானசம்பந்த சுவாமிகள் திருக்கல்யாணப் பெருவிழாவும் 1-6-99 அன்று ஸ்ரீ திருஞான சம்பந்தர், திருநீலநக்கர் திருநீலகண்டயாழ்ப்பாணர், முருகநாயனார் குருபூசை விழாக்களும் நடைபெற்றன. பணி மன்ற மாணவ, மாணவியரின் சொற்பொழிவுகள் நடைபெற்றன.

★ திருநெல்வேலி, வண்ணார்பேட்டை அருள்மிகு உண்ணாமுலை அம்பாள் சமேத ஸ்ரீ அருணாசலேஸ்வரர் ஆலய மகா கும்பாபிஷேகம் 23-6-99 அன்று சிறப்பாக நடைபெற்றது. திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் அதிபர் கயிலை மாமுனிவர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள், தொண்டை மண்டல ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ ஞானப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள், பெருங்குளம் செங்கோல்மட ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ கல்யாண சுந்தர சத்திய ஞான பண்டார சந்நிதி, திருநெல்வேலி சாரதா மகளிர் கல்லூரி தலைவர் ஸ்ரீலஸ்ரீ சுவாமி சங்கரானந்தா ஆகியோர் முன்னிலை வகிக்க பிள்ளையார்பட்டி டாக்டர் சிவஸ்ரீ (. பிச்சைக்குருக்கள் சிவாசாரியார் தலைமை ஏற்று கும்பாபிஷேகத்தை நிகழ்த்தினார். அ மி அருணாசலேஸ்வரர் உண்ணாமுலை அம்பாள் நற்பணி மன்றத் தலைவர் K.P. சபாபதியாபிள்ளை, புரவலர் அலங்கார் ஆ. கந்தசாமி பிள்ளை மற்றும் கோயில் அதிகாரிகள் உறுதுணை புரிந்தனர்.

★ திருக்கயிலாய பரம்பரை சைவ ஆதீனங்களின் சீடர் குழுவினர் சார்பில் மதுரை திருநகர் சித்தாலங்குடி ஹவில்தார் அமரர் மீனாட்சிசுந்தரம்பிள்ளை நினைவு டிரஸ்ட் முதியோர் இல்லத்தில்

---

பழிவாங்குதல் என்பது அற்பர்கள் ஆனந்தம் காணும் செயலே ஆகும். —ஜுவெனல்

28-4-99 அன்று உமாபதி சிவாசாரியார் குருபூஜை மற்றும் 10-5-99 அன்று திருநாவுக்கரசு சுவாமிகள் குருபூஜை விழா ஆகியவை சிறப்பாக நடைபெற்றன. மதியம் அன்பர்களுக்கு மாகேசுவர பூஜை நிகழ்த்தப்பட்டது.

★ சென்னைச் சிவனடியார் திருக்கூட்டத்தின் சார்பில் திருக்கழுக்குன்றத்தில் 54-ஆம் ஆண்டு ஆனிமகத் திருமுறை இன்னிசைப் பெருவிழா ஜூலை 13, 14, 15, 16 ஆகிய நாள்களில் சிறப்பாக நடைபெற்றது. திருத்தல வழிபாடு, திருமுறைப் பேரவை, திருப்படித் திருவிழா, திருமுறைகளுக்கு அருச்சனை, திருமுறை இசை அரங்கு ஆகியன நடைபெற்றன.

★ விக்கிரமசிங்கபுரம் சைவநெறிக் கழகத்தில் ஏப்ரல் 3, 10, 17 மற்றும் ஜூன் 5, 12, 19, தேதிகளில் M. சிவசண்முகம் திருவருட்பயன் சொற்பொழிவு நிகழ்த்தினார். 26-6-99 அன்று மாதவச் சிவஞான முனிவருக்கு சிறப்பு வழிபாடுகள் நிகழ்த்தப்பட்டன;

★ திருக்குடந்தைத் திருமுறை மன்றத்தின் 354 வது தேவாரத் திருமுறை சிறப்பு இன்னிசை விழா (15-5-99) அன்று சோமேசர் திருக்கோயிலில் நடைபெற்றது. திருமாகறல் ப. இராமச்சந்திரன் இன்னிசை நிகழ்த்தினார். 356 வது சிறப்புச் சொற்பொழிவு நிகழ்ச்சி 9-7-99 அன்று நடைபெற்றது. பெரம்பலூர் இலக்கியச் செம்மல் N.K. இராமச்சந்திரன் 'வைதாரையும் வாழ வைப்பான்' என்ற தலைப்பில் சிறப்புரை ஆற்றினார்.

★ டெல்லி உச்ச நீதிமன்ற முன்னாள் நீதிபதி மாண்பமை நீதியரசர் திருமிகு S. மோகன் அவர்களுக்கு திருநெல்வேலி மாவட்டம், விக்கிரமசிங்கபுரம் சைவ நெறிக் கழகத்தின் சார்பில் ஜூலை 7ம் நாள் பாராட்டுவிழா நடத்தப்பெற்றது. பா. அம்மையப்பன் வரவேற்க, மு. சிவசைலம் தொடக்கவுரை ஆற்றினார். வழக்கறிஞர் கே. கணேசன், சித்தாந்தப் பெரு நாவலர் சி.சு. மணி ஆகியோர் பாராட்டிப் பேசினர். நீதியரசர் பாராட்டினை ஏற்றுச் சிறப்புரை வழங்கினார் ச. கந்தசாமி நன்றி கூறினார்.

★ மதுரை திருவள்ளுவர் மன்றத்தின் சார்பில் நடைபெற்று வரும் கேட்போர் மையத்தின் 25வது வெள்ளிச்சந்திப்பு 15-7-99 அன்று நடைபெற்றது. ஊழ்வினையும் ஆள்வினையும் என்ற பொருளில் பேராசிரியர் Dr. இரா. அரங்கராஜன் சிறப்புரையாற்றினார்.

# சிவ வடிவங்கள்

தி. திருநாவுக்கரசு, பி.எஸ்.ஸி.
சைவசமயப்பயிற்சி மையம், தஞ்சை.

ஆதியும் அந்தமும் இல்லா அருட்பெருஞ்சோதியான சிவபரம் பொருளின் அருள் வடிவங்களை நம் முன்னோர்கள அவனருளையே கண்ணாகக் கொண்டு கண்டு மகிழ்ந்து போற்றியதோடமையாமல் நம்மனோர் உய்வடைய வேண்டி அவ்வடிவங்களைத் தம் அருட் பாடல்களின் வாயிலாகச் சுட்டிக்காட்டியும் சென்றுள்ளனர். அவற்றைத் தொகுத்து ஈண்டுக் காண்போம்.

நிலம் நீர் தீ காற்று ஆகாயம் என்று ஐம்பெரும் பூதங்களின் வடிவாக வணங்கப் பெற்று வந்த சிவன் பின்பு ஞாயிறு திங்கள் இயமானன் எனும் வடிவங்களுடன் அட்டமூர்த்தி யாக வழிபடப் பெற்றான். இவ்வாறு அருவமாகவும், 'அருவுருவமாகவும் வணங்கப் பெற்று வந்த சிவன் வடிவ நிலைகள் காலப்போக்கில் நின்ற, இருந்த வடிவினவாய், போக, வேக யோக, வடிவ நிலையினதாய் வளர்ச்சிபெற்று அவ்வடிவங்கள் சிவன் மாகேஸ்வர வடிவங்கள் என்றும் அவை இருபத்தைந்து எனவும் வகுத்துரைக்கப் பெற்றன. பின்னர் 'ஐயைந்தின் அப்புறத்தானும்' என்று சிவன் இருபத்து ஆறாவது வடிவமாக ஆரூர்த் தியாகராசர் வடிவம் சுட்டப் பெற்றது.

அவ்வடிவங்களேயன்றி அதன் பின்னர்த் தோன்றிய சைவ சமய இலக்கியங்கள் மற்றும் புராணங்கள் சுட்டிக் காட்டிய சிவவடிவங் களையும் சேர்த்து சிவபெருமானுடைய அஷ்டாஷ்ட வடிவங்கள் என்னும் அறுபத்து நான்கு வடிவங்களைச் சிவபராக்கிரமம் என்னும் நூல் வரையறுத்துக் கூறுவதாயிற்று.

இவ்வாறாகக் காலந்தொறும் வளர்ச்சி பெற்ற சிவன் எண்பத் தொரு வடிவப் பெயர்களை

| | |
|---|---|
| சிவவடிவங்கள் | திரு. மா. சிவகுருநாதப்பிள்ளை |
| சிவமூர்த்தங்கள் | திரு. வி.சா. குருசாமி தேசிகர் |
| மகேஸ்வரவடிவங்கள் | திரு. வலயப்பேட்டை ரா. கிருஷ்ணன் |
| சிவத்திருமேனிகள் | திரு. பு.மா. செயசெந்தில்நாதன் |
| சிவபராக்கிரமம் | திரு. ரத்தினவேல் முதலியார் |

காசியப சிற்ப சாத்திரம், சிற்ப ரத்தினம்,
சகளாதிகாரம், தென்குடித் திட்டைத் தலபுராணம்.

ஆகிய நூல்களின் அடிப்படையில் கண்டுத் தொகுத்தளிக்கப் பெறுகின்றது.

1. அரியர்த்தர்
2. அர்த்தநாரி
3. அகோரவீரபத்ரர்
4. அகோரஸ்திரமூர்த்தி
5. அசுவாருடர்
6. அந்தகாசுரஹாரணர்
7. ஆடல்வல்லான்
8. ஆபத்சகாயர்
9. இடபாருடர்
10. இடபாந்திகர்
11. இலகுளீசர்
12. இலிங்கமூர்த்தி
13. இலிங்கோத்பவர்
14. உக்கிரர்
15. உமாமகேசர்
16. ஊர்த்துவ தாண்டவர்
17. உமாசகாயர்
18. உமேசர்
19. எக்ரேஸ்வரர்
20. ஏகபாதர்
21. ஏகபாததிருமூர்த்தி
22. ஏகாதசருத்ரர்
23. கல்யாணசுந்தரர்
24. கங்காளர்
25. கங்காதரர்
26. கங்காவிசர்ச்சனர்
27. கஜாரி
28. கஜாந்திகர்
29. கஜமுக அனுக்ரகர்
30. கருடாந்திகர்
31. காமாரி
32. காலாரி
33. காலபைரவர்
34. கிராதர்
35. கூர்ம சங்காரர்
36. குருமூர்த்தி
37. கௌரிவரப்ரதர்
38. கௌரி லீலாசமேதர்
39. சந்திரசேகரர்
40. சக்ரதானர்
41. சக்ரப்பிரதர்
42. சலந்தராரி
43. சதாசிவர்
44. சர்வ சம்ஹாரர்
45. சந்தியாதாண்டவர்
46. சண்டேசதாண்டவர்
47. சண்டேசானுக்ரகர்
48. சார்த்தூலஹரி
49. சிம்மக்னர்
50. சிவலிங்கம்
51. சிஷ்யபாலர்
52. சுரகரேசர்
53. சுகாசனர்
54. சோதிலிங்கேசுரர்
55. சோமாஸ்கந்தர்
56. தட்சயக்ஞர்
57. திரிபுராரி
58. திரிபாததிருமூர்த்தி
59. தெட்சணா மூர்த்தி
60. நீலகண்டர்
61. பாசுபதர்
62. பிரார்த்தனாமூர்த்தி
63. பிட்சாடனர்
64. பிரம்மசிரச்சேதர்
65. புஜங்கலளிதர்
66. புஜங்கத்திராசர்
67. பைரவர்
68. முகலிங்கம்
69. மச்சாரி
70. மகாசதாசிவர்
71. வராகசம்ஹாரர்
72. விக்னப்ரசாதர்
73. [illegible]பக்ரர்
74. வீணாதெட்சிணாமூர்த்தி
75. வடுகர்
76. யோகதட்சிசிணா மூர்த்தி
77. ஹரிவிரிஞ்சதாரணர்
78. ஷேத்திரபாலர்
79. ரக்தபிட்சாபிரதானர்
80. தாம்பத்ய தெட்சிணாமூர்த்தி
81. திரிமூர்த்தி

இவ்வடிவ விளக்கங்களை முனைவர் சிவ. திருச்சிற்றம்பலம் அவர்களுடைய தேவார மூவர் காட்டும் சிவ வடிவங்கள் என்னும் ஆய்வுக் கட்டுரை நூலில் காணலாம்.

Regd. No : 004358 / 16 / 6 / AL / 85 / NT III dt : 26—9—85
UZHAVARAM (Monthly) Regd No. TN / MA HO 16/98
Licensed to Post Without Prepayment Under Licence No. 11/99
Posted at Madurai Bazaar Post Office on 16-7-99

பெறுநர்

திரு N. திருநாவுக்கரசு
B.O.L
7/2 அச் 4வது தெரு
T. T. நகர்
அப்பர் அருளகம்
காரைக்குடி 630002




உ

சிவமயம்

'என் கடன் பணிசெய்து கிடப்பதே'

**உழவாரம்**

ஆசிரியர் : சடைச்சுந்தரன்

துணை ஆசிரியர் : சிவ. பார்வதி B.Com. B.A

மதுரைப் பன்னிரு திருமுறை மன்றத்திற்காக

வெளியிடுபவர்: C.S. சொக்கலிங்கம்

முகவரி : D. 89 பாரதியார் தெரு, டோர் நிர் 12, திருநகர், மதுரை - 6.

O ☎ 883086

அச்சு : அபிராமி அச்சகம், B-40 திருநகர், மதுரை–6. ☎ 883085

புரவலர் கட்டணம் ரூ. 1000/-

ஆயுள் சந்தா - ரூ. 250/- ஆண்டுச்சந்தா ரூ. 25/-